[9th August 1960

MR. SPEAKER: The question is out of order.

*Use of iron removed from Madras tram lines*

* 57 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

சென்னையிலுள்ள டிராம் லைன்களிலிருந்து கிடைக்கும் இரும்பு இம் மாநிலத்தில் உள்ள தொழிற்சாலைகளிலேயே வேலைக் காகும் பொருள்களுக்கு உபயோகப்படுத்த அப் பொருள்களை இங்கேயே வினியோகிக்க அரசாங்கம் வகைசெய்ய உத்தேச முண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN: The possibilities of allotting the tram rails to the Rerolling Mills in this State to produce some specified materials which are in great demand were explored and in view of the lack of response on the part of the Rolling Mills, the proposal was dropped.

SRI A. VEDARATHNAM: இங்கு அந்த இரும்பைப் பயன் படுத்த முடியவில்லையானால் இப்போது அதை என்ன செய்திருக் கிறார்கள்? வெளி நாட்டுக்கு எங்காவது கொண்டு போகப் போ கிறார்களா? இப்போது கண்ட்ரோல் ஆர்டர் இருக்கும் காரணத் தால் இந்த மாநிலத்திற்கு வந்த இரும்பை வெளியே கொண்டு போகலாமா? இதைப் பயன்படுத்த தனியார்கள் முன்வரவில்லை யானால் அரசாங்கமே ஏன் எடுத்துப் பயன்படுத்தக் கூடாது?

THE HON. SRI R. VENKATARAMAN: இதில் ஐந்தாறு கேள்விகள் இருக்கின்றன. சென்னை ராஜ்யத்தில் இருக்கும் "ரீ-ரோலிங்" மில்லில் இதை உபயோகப்படுத்த முடியவில்லை யென்று சொல்லிவிட்டார்கள். வெளி ராஜ்யத்திலிருந்து வாங்கிய கம்பெனியார் வெளி ராஜ்யத்திற்கு எடுத்துக்கொண்டு போய் விட்டார்கள். சென்னை சர்க்கார் "ரீ-ரோலிங்" செய்ய வேண்டு மென்றால் "ரீ-ரோலிங் மில்" வேண்டும். அது இப்போது இல்லை.

SRI R. SRINIVASA IYER: அந்தத் தண்டவாளங்கள் இப் பொழுது எந்த இராஜ்யத்திற்கு எடுத்துக்கொண்டு போகப்படு கின்றன? அந்த இராஜ்யத்திலுள்ள ரீ-ரோலிங் மில்லிலே இந்த இராஜ்யத்தின் சார்பாக அவைகளை 'ரீ-ரோல்' செய்து நமக்குத் தேவையான இரும்பு சப்ளை செய்யக் கூடிய வகையில் சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: I want to remind the hon. Member that he can put questions which are within the competence and jurisdiction of this Ministry. I do not know what they have done with these rails which they have produced and whether they have exported them and all that.

SRI A. GOVINDASAMI: தண்டவாளங்களைப் பெயர்த்து எடுத்ததில் சர்க்காருக்குக் கிடைத்த தொகை எவ்வளவு?

THE HON. SRI R. VENKATARAMAN: ஒன்றும் இல்லை.

9th August 1960]

SRI A. VEDARATHNAM : இங்கிருந்து அந்த இரும்பை வெளியே கொண்டுபோகும் நேரத்திலே, அதை மறுபடியும் நம்முடைய இராஜ்யத்திலே கொண்டுவந்துதான் விநியோகிக்க வேண்டுமென்ற ஒரு நிபந்தனையின்பேரில் அவர்கள் இந்த மாநிலத்திலிருந்து வெளியே எடுத்துச் செல்வதற்கு அனுமதி கொடுக்க முடியாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவ்விதமான அதிகாரம் சர்க்காருக்கு இல்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : எடுக்கப்பட்ட தண்டவாளங்கள் ஏராளமான ஸ்டாக் சென்னையிலேயே இருக்கிறது என்று சர்க்காருக்குத் தெரியுமா ? இதற்குத் தனிப்பட்ட விலை நிர்ணயிக்கப்பட்டிருப்பதால் அந்த விலைக்கு அதிகமாக அவர்கள் விற்க முடியாது என்றும் சர்க்காருக்குத் தெரியுமா ? இதைப் பயன்படுத்த முடியும் என்றால், அதுபற்றி சர்க்கார் ஏதாவது முயற்சி எடுத்துப் பார்த்ததா ?

THE HON. SRI R. VENKATARAMAN: இதைப் பயன்படுத்துவதாக சர்க்காருக்கு இப்பொழுது யோசனை இல்லை. கனம் அங்கத்தினர் சொல்லிய மற்ற விஷயங்களையெல்லாம் நான் தகவலாக எடுத்துக்கொள்ளுகிறேன்.

*Schemes for the welfare of women and children*

*58 SRI P. G. MANICKAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை செகரடேரியட்டில் 1960-ம் வருடம் மே மாதம் 18-ந் தேதி ராஜ்ய சமூக க்ஷேம நல போர்டுடன், அபிவிருத்திக் கமிஷனர் திரு. ஆர். ஏ. கோபால்சாமி அவர்கள் புதிய பஞ்சாயத்துச் சட்டத்தின் விளைவாக பெண்கள், குழந்தைகளுக்கான எதிர்கால வேலைத்திட்டத்தைக் குறித்து பரிமாறிக் கொண்ட கருத்துக்கள் நம் ராஜ்ய சர்க்காரின் பரிசீலனைக்குக் கொண்டுவரப்பட்டதா ?

(ஆ) இக் கருத்துக்களின் மீது நம் ராஜ்ய சர்க்காரால் பரிசீலனை செய்யப்பட்டு ஊர்ஜிதம் செய்யப்பட்ட நடவடிக்கைகளின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes, Sir.

(ஆ) The matter is under examination.

*Union official language*

* 59 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Chief Minister be pleased to state whether the Government have made any further representation to the Union Government regarding the Union official language?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.